# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 7 தமிழ் மாத இதழ் • September 2014 • Annual Subscription Rs. 100/-

• மலர் : 1 • இதழ் : 7 • செப்டம்பர் 2014 • வருடச் சந்தா ரூ. 100/-

## யோக சிகிச்சை - 2



இன்ப உணர்வாயினும் சரி, துன்ப உணர்வாயினும் சரி எல்லை மீறி அனுபவம் ஆகும் போது, அதனால் ஏற்படும் தொடர் இரசாயன மாற்றம் உடல் ஆரோக்கியத்தை சிதைத்து விடுகிறது.

- ஸ்ரீ பகவத்



யோக சிகிச்சை என்ற தலைப்பில் 2012 செப்டம்பர் மாத இதழில் இதே தலைப்பில் ஒரு கட்டுரையை வெளியிட்டோம். அதனுடைய தொடர்ச்சியாக இக்கட்டுரையையும் பயன்படுத்திக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

திருச்சி அன்பர் ஒருவர் தனக்குத் தெரிந்த ஒரு செய்தியை விவரித்தார்.

"எனது நண்பர் ஒருவர் நன்றாகத் தான் இருந்தார். ஒரு முறை அவர் தனக்கு மருத்துவப் பரிசோதனை செய்து கொண்டார். சோதனையில் அவருக்கு பல வருடங்களாக சர்க்கரை நோய் இருப்பதாகத் தெரிய வந்திருக்கிறது...

"சோதனை செய்யும் வரை நண்பர் நன்றாகத் தான் இருந்தார். சர்க்கரை நோயினால் அவருக்கு எந்தப் பாதிப்பும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் அவருக்கு சர்க்கரை நோய் இருப்பதாகத் தெரிந்ததும் அவருக்கு ஒவ்வொரு பாதிப்பாக ஏற்பட ஆரம்பித்தது. நோயினால் அவருக்கு பாதிப்பு ஏற்பட்டதை விட நோயைப் பற்றிய அவரது எண்ணந்தான் பாதிப்பை ஏற்படுத்தியதாகத் தெரிகிறது. இப்படிப்பட்ட பாதிப்புகளிலிருந்து ஒருவர் எப்படி மீள வேண்டும்?"

- இப்படி அவர் கேட்டார்.

ஒரு முறை காலரா நோயினால் லட்சக்கணக்கானோர் இறந்து விட்டனர்.

நாரதர் எமதர்மனிடம் சென்று முறையிட்டார்.

"நீங்கள் ஏன் இப்படி காலராவின் மூலம் லட்சக்கணக்கானவர்களை அழித்து விட்டீர்கள்?"

- இப்படி அவர் கேள்வி கேட்டார்.

எமதர்மன் பதிவேடுகளைப் புரட்டிப் பார்த்தார். "காலரா மூலமாக லட்சக்கணக்கானவர்களை அப்புறப்படுத்தச் சொல்லி நான் ஒன்றும் உத்தரவு போடவில்லையே. காலராவில் பத்தாயிரம் பேர்களை அப்புறப்படுத்துமாறு மட்டுமே காலரா தேவதைக்கு நான் உத்தரவிட்டிருந்திருக்கிறேன்."

- என்று கூறிய எமதர்மன், காலராவை பரப்பிய காலரா தேவதையைக் கூப்பிட்டு விசாரித்தார்.

"எமதர்மராஜாவே! நீங்கள் உத்தரவிட்டது போல் பத்தாயிரம் பேர்களை மட்டுமே நான் அப்புறப்படுத்தினேன். மற்றபடி இறந்தவர்கள் அனைவரும் காலரா வந்து விட்டதோ என்ற பயத்தில்தான் இறந்து விட்டார்கள். அவர்களுடைய பக்கத்திலேயே நான் போகவில்லை".

- இப்படி காலரா தேவதை விளக்கம் கொடுத்தது.

நோயினால் உபாதை ஏற்படுகிறதா,

அல்லது நோயைப் பற்றிய எண்ணத்தினால் உபாதை ஏற்படுகிறதா?

மேலே கண்ட இரண்டு செய்திகளின் மூலமாக நாம் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவென்றால்,

நோயினாலும் பிரச்சினைகள் ஏற்படுகின்றன;

நோயைப் பற்றிய நினைவுகளாலும் பிரச்சினைகள் ஏற்படுகின்றன.

நோயினால் ஓர் உபாதையோ, பிரச்சினையோ ஏற்பட்டால் அதற்கு நாம் மருந்துகளை எடுத்துக்கொள்ளலாம்.

ஆனால் நோயைப் பற்றிய எண்ணங்களை நாம் எவ்வாறு எதிர்கொள்வது?

நோயைப் பற்றிய எண்ணங்கள் ஏற்படும் போது

அந்த எண்ணங்களை அப்படியே பிரவாகமாக விட்டுவிட வேண்டுமா?

"அந்த எண்ணங்கள் அவையாக வருகின்றன; அவற்றை நிர்வாகம் செய்ய வேண்டிய பொறுப்பு எதுவும் நமக்குக் கிடையாது"

- என நாம் அந்த எண்ணங்கள் எவற்றையும் கண்டு கொள்ளாமல்

அவை போக்கில் விட்டுவிட வேண்டுமா?

அல்லது, "எனக்கு நோயே கிடையாது", "நான் ஆரோக்கியமாக இருக்கிறேன்"

- இப்படி நேர்மறை எண்ணங்களை

- Positive thought-களை வளர்த்துக் கொள்ள வேண்டுமா?

நமக்கு ஏற்பட்ட உபாதைகளை - நோயை நாம் எப்படி அணுகுவது?

நமக்கு ஏற்படும் எண்ணங்கள் நமது உபாதைகளை தீவிரப்படுத்துகிறது, அதிகமாக்குகிறது என்பது

நமக்கு வெளிப்படையாகத் தெரிகிறது.

நமது எண்ணங்களுக்கும் நமது உபாதைகளுக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருப்பது மட்டும் நமக்குத் தெரிகிறது.

அந்தத் தொடர்பு சரியான முறையில் இருந்தால் சரியான விளைவும்

தவறாக இருந்தால் தவறான விளைவும் ஏற்படத்தான் செய்யும்.

நமக்கு ஏற்படும் உபாதைகளுக்கும் நமக்கும் உள்ள உறவு எப்படி இருக்க வேண்டும்?

நமக்கு ஏற்படும் உபாதைகளுக்கும், நமது எண்ணங்களுக்கும் இடையே உள்ள உறவு எப்படி இருக்க வேண்டும்?

நாம் ஒரு கரடுமுரடான சாலையில் காலை வாக்கிங் போகிறோம். தவறுதலாக நாம் ஒரு குழியில் காலை வைத்து விட்டதால் கீழே விழுந்து விடுகிறோம். காலில் அடிபட்டு விடுகிறது. இலேசான காயந்தான். ஆனால் அடிபட்ட இடத்தில் சிறிய வீக்கமும், வலியும் ஏற்படுகிறது.

வீக்கமும், வலியும் இப்படி ஏற்படுவது சரிதானா?

அல்லது வலியும் வீக்கமும் ஏற்படாமல் இருப்பது தான் சரியா?

வலியும், வீக்கமும் இப்படி ஏற்படக் காரணம் என்ன?

நமது உடலுக்கு ஏதாவது பிரச்சினை ஏற்படும் போது

நமது உடலே அந்த பிரச்சினையைத் தீர்க்கும் வழியை மேற்கொள்கிறது.

நமது கையிலோ, காலிலோ சிறிய இரத்தக்காயம் ஏற்படுகிறது என வைத்துக்கொள்வோம். நாம் மருந்து எதையும் உபயோகிக்காத நிலையில் அந்தக் காயம் தானாகக் குணமாகி, காயம் இருந்த தடமே தெரியாமல் மறைந்து விடுவதை நாமே பார்த்திருக்கிறோம்.

இது எப்படி சாத்தியமாகிறது?

நமது உடலுக்கு, அதுவே அதனை சீரமைத்து சரிப்படுத்திக்கொள்ளும் அறிவும், ஆற்றலும் உள்ளன.

நமக்கு ஏற்படும் பல நோய்கள், பல உபாதைகள்

நாம் எந்த மருத்துவமும் செய்யாத நிலையில் தாமே சரியாகி விடுகின்றன.

இப்போது அதே கேள்வியை மீண்டும் கேட்போம்.

காலில் அடிப்பட்டதனால் ஏற்படும் வலியும், வீக்கமும் சரியானதா?

அல்லது தவறானதா?

அவை வரவேண்டிய காரணமென்ன?

வலியும், வீக்கமும் நமது காயத்தைக் குணமாக்கும் நோக்கத்தில் தான் நமக்கு ஏற்பட்டுள்ளன.

வலி மற்றும் வீக்கமானது இரத்த ஓட்டம் மற்றும் மூளையின் உத்தரவைக் கவர்ந்து இழுப்பதற்குத் தேவையானவையாகும்.

அடிபட்ட இடத்தில், வலியோ, வீக்கமோ ஏற்படாத பட்சத்தில்,

அந்த அடியினால் உட்காயம் ஏதாவது ஏற்பட்டிருக்கும் பட்சத்தில்

அதுதான் கேடானது.

வலியற்ற காயந்தான் ஆபத்தானது.

வலியும், வீக்கமும் உதவி செய்வதற்காகவே வருகின்றன. பாதிப்பைச் சீரமைப்பதற்காகவே வருகின்றன.

அவற்றை நாம் எப்படி எடுத்துக் கொள்ள வேண்டும்? வலியாகவும் வீக்கமாகவும் வந்துள்ள உபாதையை நாம் எப்படி எடுத்துக்கொள்ள வேண்டும்?

நண்பனாகவா அல்லது பகையாளியாகவா?

நமது காலில் ஆழமாக முள் ஒன்று தைத்து விட்டது. மருத்துவர் ஒருவர் அறுவை சிகிச்சை மூலம் அந்த முள்ளை அப்புறப்படுத்துகிறார். அவருடைய சிகிச்சை நமக்கு வேதனையைத் தான் கொடுக்கிறது.

வேதனையைக் கொடுக்கும் மருத்துவரை நாம் நமக்கு வேண்டியவராக எடுத்துக்கொள்வோமா?

அல்லது வேண்டாதவராக எடுத்துக்கொள்வோமா?

அவருடைய வேலை நமக்கு உபாதையைக் கொடுக்கலாம். அவர் நமக்கு உதவி செய்யவே வந்துள்ளார். அவர் கொடுக்கும் உபாதைதான் நம்முடைய பிரச்சினையைச் சீராக்கும் சிகிச்சை.

அவரது சிகிச்சை வேறு, உபாதை வேறல்ல. இரண்டும் ஒன்றே.

உபாதையின் வடிவிலேயே சிகிச்சை உள்ளது.

நம் வயிற்றில் ஒரு வலி ஏற்படுகிறது. இதற்கு முன்னாலும் இப்படி வலி ஏற்பட்டுள்ளது. இதற்கு முன்பு இத்தகைய வலி ஏற்பட்ட சில நிமிடங்களில் நமக்கு வாந்தியும், வயிற்றோட்டமும் ஏற்பட்டு விட்டது.

இப்போதும் அதே போன்ற வலி ஏற்படுகிறது. நாம் அதனை எவ்வாறு எடுத்துக்கொள்வோம்?

வாந்தி மற்றும் வயிற்றோட்டத்துக்கான முன்னறிவிப்பாக எடுத்துக்கொள்வோமா?

இந்த வலி இன்னும் சிறிது நேரத்தில் வாந்தியாகவும், வயிற்றோட்டமாகவும் மாறிவிடும் என்று எடுத்துக்கொள்ள வேண்டுமா?

வயிற்றில் வலி ஏற்படுகிறதென்றால் அதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கும். காரணம் இல்லாமல் காரியமில்லை.

வயிற்றில், நாம் சாப்பிட்ட உணவின் காரணமாக ஏதோ ஒரு பிரச்சினை இருக்கிறது.

அதைச் சீரமைக்கும் மருந்தாக - மருத்துவராகவே நமக்கு வயிற்றில் வலி ஏற்படுகிறது.

இந்த வலி இன்னும் சற்று நேரத்தில், முன்பு ஏற்பட்டதுபோல், வாந்தியையும், வயிற்றோட்டத்தையும் கொண்டு வந்துவிடும்

- என்று நாம் அதனைப் பார்ப்போமாயின்

அந்த வலியை நாம் நம் வயிற்றிலுள்ள குறையைச் சீரமைக்கும் மருந்தாகப் பார்ப்பதில்லை.

பதிலாக, வாந்தியையும், வயிற்றோட்டத்தையும் கொண்டு வரும் விஷமாகவே அந்த வலியைப் பார்க்கிறோம்.

அந்த வலியை நாம் மருந்தாகப் பார்க்கும்போது அது மருந்தாக வேலை செய்கிறது.

அதையே விஷமாகப் பார்க்கும்போது விஷமாக மாறி வாந்தியையும், வயிற்றோட்டத்தையும் கூட கொண்டு வந்துவிடுகிறது.

நமக்குத் திடீரென நெஞ்சுவலி ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம்.

நமக்கு ஏற்பட்ட நெஞ்சுவலியை நாம் எப்படிப் பார்ப்போம்?

இரண்டு தினங்களுக்கு முன்னால் நமக்குத் தெரிந்த ஒருவருக்கு இதேபோல் வலி ஏற்பட்டு மாரடைப்பு ஏற்பட்டு மரணமடைந்து விட்டார் என வைத்துக்கொள்வோம்.

"அதுபோல் மாரடைப்பு ஏற்படுவதற்காகத்தான் நெஞ்சுவலி ஏற்படுகிறதோ?"

- என நமக்கு வந்த நெஞ்சுவலியை நாம் எடுத்துக் கொள்வோமாயின்

நமக்கு ஏற்பட்ட நெஞ்சுவலியை

மாரடைப்பை ஏற்படுத்தக்கூடிய ஒரு விஷமாகவே பார்ப்போம்.

- ஓர் எதிரியாகவே பார்ப்போம்.

- ஓர் அபாயகரமானதாகவே பார்ப்போம்.

உண்மையில் நமக்கு ஏற்படும் உபாதைகள் அனைத்தும் நம்முடைய பிரச்சினைகளைத் தீர்க்கும் மருந்தாகவே உருவெடுக்கின்றன.

-மருந்தாகவே தோற்றுவிக்கப்படுகின்றன.

மருந்தாகப் பார்க்கவேண்டிய ஒன்றை மருந்தாகப் பார்க்காமல்

விஷமாகப் பார்ப்போமானால்

அது விஷமாகவே வேலை செய்து விடக்கூடும்.

வயிற்றில் ஏற்பட்ட வலி,

அது வந்த வேலையை முடித்துக்கொண்டு மறைந்துவிடுகிறது.

வாந்தியையும், வயிற்றோட்டத்தையும் கொண்டு வந்துவிடுமோ என

அதை ஒரு விஷமாகப் பார்த்தோமானால் வாந்தியும், வயிற்றோட்டமும் கூட ஏற்பட வாய்ப்புள்ளது.

நமக்கு வயிற்றிலோ, தலையிலோ வலி ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம்.

வயிற்று வலி என்பது ஒரு நோயா?

தலைவலி என்பது ஒரு நோயா?

நம் உடலில் ஏற்படும் பிரச்சினைகளைச் சீரமைப்பதற்காக நம் உடல் ஏற்படுத்தும் சிகிச்சை முறையே -

நமக்கு நோய் போலத் தோன்றுகிறது.

உடலில் தோன்றும் உபாதைகளெல்லாம் நோய்கள் அல்ல. அவையெல்லாம் மருந்துகளே என்று புரிந்துகொள்வதே

அவற்றை யதார்த்தமாகப் புரிந்துகொள்வதாகும்.

- உள்ளபடி புரிந்து கொள்வதாகும்.

இது ஒரு நேர்மறைச் சிந்தனையா?

இது ஒரு Positive thinking எனக் கூறலாமா?

இது Positive thinking அல்ல. ஆனாலும் இது Positive thinking போன்று வேலை செய்கிறது.

எப்படி?Positive thinking என்பது நாமாகக் கற்பிதம் செய்வது. நல்ல நோக்கத்துக்காக அப்படிக் கற்பிதம் செய்வது.

ஒருவர் நல்லதையே செய்வார் என நம்புவது Positive thinking.

நமக்கு ஏற்படும் உபாதைகள் யாவும் நமக்கு நன்மை செய்வதற்காகவே ஏற்பட்டுள்ளன. நமக்கு வேண்டாதவை என நாம் தான் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறோம் என்பது

- நாமாகச் செய்து கொள்ளும் கற்பிதம் அல்ல.

நடைமுறை உண்மையைப் புரிந்து கொண்டதால் ஏற்பட்ட ஒரு தெளிவு தான் இது.

நமக்கு ஏற்படும் சிறிய உபாதைகளை இந்த முறையில் அங்கீகரித்து, அதனை சோதித்து அறிவதன் மூலமே

இதனை ஒரு யதார்த்த உண்மையாக நம்மால் ஏற்றுக் கொள்ளமுடியும்.

இது எப்படி Positive thinking போன்றும் செயல்படுகிறது?

தண்ணீரை வைத்து சிலர் சில சோதனைகளைச் செய்துள்ளனர்.

ஒரு பாத்திரத்தில் தண்ணீரை எடுத்துக் கொண்டு

அந்தத் தண்ணீருக்கான இழிந்த பண்புகளைக்கூறி அந்தத் தண்ணீரை நாம் நம்முடைய எண்ணங்களாலும் சொற்களாலும் தூற்றினோமென்றால்

நமது எண்ணமும் சொற்களும் ஏதோ ஒரு வகையில் அந்தத் தண்ணீரில் பிரதிபலிப்பதை

ஆய்வு செய்தவர்கள் படம் எடுத்து அளவு செய்துள்ளார்கள்.

நாம் தண்ணீரைத் தூற்றுவதால் தண்ணீரின் உள்முகக் கட்டமைப்பு - internal structure விகாரமடைவதாகக் கூறுகிறார்கள்.

அதே நேரம் தண்ணீருடைய சிறப்பியல்புகளை நாம் மனப்பூர்வமாகவும் மகிழ்ச்சியுடனும் அந்தத் தண்ணீரிடம் வெளிப்படுத்தும் போது

தண்ணீரின் உள்முகக் கட்டமைப்பு ஒரு மலரைப் போல் மலர்வடைவதாகக் கூறுகிறார்கள்.

சரி, அது உண்மையாகவே இருந்துவிட்டுப் போகட்டும். தண்ணீருக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்?

நாம் தண்ணீருக்குள்ளே வாழ்ந்து கொண்டிருப்பதால் தண்ணீருக்கும் நமக்கும் ஒரு சம்பந்தம் ஏற்பட்டுவிட்டது.

அதென்ன சம்பந்தம்?

நமது உடலில் 94% தண்ணீர்தான் உள்ளது.

ஆகவே நமது எண்ணங்கள் அனைத்தும் இந்த நீரிலும் பிரதிபலிக்கின்றன.

- இந்த உடலிலும் பிரதிபலிக்கின்றன.

நமக்கு ஏற்படும் உடல் உபாதைகளை நம்மைக் காக்க வரும் மருத்துவ சிகிச்சையாக மனப்பூர்வமாக அங்கீகரிப்பதும் - ஒரு யோக சிகிச்சையே.

நாம் அளிக்கும் மனப்பூர்வமான அங்கீகாரம்

நமது உடலிலுள்ள தண்ணீர் மூலக்கூறுகளிலும் பிரதிபலித்து நம் உடலும் யோக சிகிச்சைக்கு ஒத்துழைப்பு வழங்குகிறது.

உடல் உபாதை என்னும் சிகிச்சை ஒரு புறமும்,

அதனை "நமக்கு உதவிக்கு வரும் ஓர் உதவியாளராக" ஏற்றுப் புரிந்துகொள்ளும் மனோரீதியான அங்கீகாரம் இன்னுமொரு புறமும்

நமக்கு ஏற்படும் உபாதையை "நம்உடல்மீது அக்கறை கொண்ட ஒன்று" நமது உடல் என்னும் நீரில் பிரதிபலிக்கும் உடல்ரீதியான வெளிப்பாடு பிரிதொரு புறமுமாக - மூன்று வழியாக நமது உடல் பிரச்சினைகள் எதிர்கொள்ளப்படுகின்றன. இந்த மும்முனை அணுகுமுறையில் நமது பிரச்சினைகளும் தீர்வடைகின்றன.

பி.கு. : இதனை முதலுதவிக் குறிப்பாக ஏற்று பரிசீலித்துக் கொள்ளவும்.

தீவிர பிரச்சினைகளுக்கு, தகுதியான மருத்துவர்களின் ஆலோசனைகளைப் பெற்றுக்கொள்ளவும். ★



கோவை ஞானமுகாமில் கலந்துகொண்டவர்கள் - ஆகஸ்ட் 2014

## ஐயாவுடைய நிகழ்ச்சி நிரல்

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 27-9-2014 சனி | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். | **ஞானத்தெளிவு பெற்றவர்கள் பகவத் ஐயாவுடன் சிறப்பு சந்திப்பு (கேள்வி-பதில்)** | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9952071525, 9444402986 |
| 28-9-2014 ஞாயிறு | பாணிக்கிரகா ஹால், புதிய எண் 29, பழைய எண் 9-A ஆர்யகௌடா ரோடு, வெஸ்ட் மாம்பலம், சென்னை-33. | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 5-30 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9952071525, 9444402986 |
| 2-10-2014 வியாழன் | ஸ்ரீ வெங்கடேஸ்வரா மகா மண்டபம், கமல வினாயகர் கோயில் பின்புறம், (ICF North Colony) சென்னை-38. | **நீங்களும் ஞானியாகலாம்** மாலை 6-00 to 8-00 மணி வரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9952071525, 9444402986 |

3-10-2014 வெள்ளி,18-10-2014 சனி, 19-10-2014 ஞாயிறு ஆகிய மூன்று தேதிகளில் மாலை 6-00 to 8-00 மணி வரை **தன்னை அறியும் ஞானம்** என்னும் பொருளில் ஐயா சிறப்புரை ஆற்றுகிறார்.

இடம் : ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம், அம்பத்தூர். செல் : 9952071525, 9444402986

## ஸ்ரீ பகவத் ஐயாவின் ஒரு நாள் ஞான முகாம்

நாள் : 05-10-2014 காலை 10-00 மணி முதல் இரவு 7-00 மணி வரை

இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், 23/10, பழைய பரோடா வங்கி தெரு, செகரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை.

நபர் ஒருவருக்கு நன்கொடை கட்டணம் ரூ. 200 மட்டும் (மதிய உணவு உட்பட)

முன்பதிவிற்கு : 9952071525, 9444402986, 9381019473

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

நமது பகவத் பாதையின் பயணத்தில் பயணிப்போரின் எண்ணிக்கையைப்போல் பயனடைவோரின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே இருக்கிறது. அதில் பயனடைந்தவர்களில் சிலர் "யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்" என்ற உயர்ந்த சிந்தனையில் அவரவர்கள் ஊரில் ஐயாவின் ஞான முகாம்களையும் சிறப்புரைக் கூட்டங்களையும் ஏற்பாடு செய்து அவ்வூர் மக்களையும் பயனடையச் செய்திருக்கிறார்கள்.

அந்த வகையில் ஐயாவின் நூல்கள் பல படித்து மேலும் ஐயாவை நேரில் சந்தித்து உரையாடி ஞானத்தெளிவு பெற்ற சென்னை திருக்கழுக்குன்றத்தைச் சேர்ந்த கார்த்திக் என்ற பல் மருத்துவர் (Dental Doctor) ஒருவர் தன்னைப் போன்ற தேடுதலைக் கொண்ட தன் நண்பர்கள் அனைவரையும் ஞான முகாமிற்கு அழைத்துச் சென்று அவர்களும் தெளிவு பெற உதவி செய்திருக்கிறார். அத்தோடு நில்லாமல் திருக்கழுக்குன்றத்திற்கே ஐயாவை அழைத்து வந்து 24-8-2014 அன்று சிறப்புரைக் கூட்டத்தையும் ஏற்பாடு செய்து தேடுதல் கொண்ட பலருடைய தெளிவுக்கு வழி காட்டியுள்ளார். மேலும் ஐயாவின் பல நூல்களையும் வாங்கி தான் சந்திக்கும் நண்பர்களுக்கு கொடுத்து இவ்வுண்மையைத் தெரியப்படுத்தி வருகிறார். அவருக்கு நமது பகவத் மிஷன் சார்பில் நன்றியை உரித்தாக்குவோம்.

மேலும் இராஜபாளையம் ஞான முகாமில் கலந்து கொண்டு பயனடைந்த கோவையைச் சேர்ந்த குணசேகரன் மற்றும் நாகை முத்துச்செல்வன் அவர்களும் அவர்களது நண்பர்களின் பெரும் முயற்சியாலும் கோவையில் இராமகிருஷ்ண விவேகானந்த ஆஸ்ரமத்தில் ஆகஸ்டு மாதம் 15, 16, 17 ஆகிய தேதிகளில் மிகச் சிறப்பான முறையில் ஞான முகாம் ஏற்பாடு செய்திருந்தனர்.

இதில் பல புதிய அன்பர்கள் கலந்து கொண்டனர். முதல் நாளில் அவர்கள் கலந்து கொண்ட போது இருந்த மன நிலைக்கும் இறுதிநாளில் அவர்கள் விடைபெறும் போது இருந்த மன நிலைக்கும் நல்ல மாறுதல் தெரிந்தது. அனைவருக்கும் நல்ல தெளிவு கிடைத்திருப்பதாகவும், மனம் மிகவும் லேசாக இருப்பதாகவும் தங்களுடைய அனுபவத்தை தெரிவித்துச் சென்றனர்.

அதில் கலந்து கொண்ட புதிய அன்பர் ஒருவர் "நான் இதுவரை ஞானத் தேடுதலில் இதுபோன்ற பல ஆன்மிக அமைப்புகள் நடத்தும் ஆன்மிக வகுப்புகளில் கலந்து கொண்டிருக்கிறேன். அதில் மனதிற்கு பல தியானப் பயிற்சிகளையும் யோகாவையும் கற்றுக்கொடுப்பார்கள், அவை அனைத்தையும் மனதில் ஏற்றிக்கொண்டு வீட்டுக்குச் சென்றதும், இனி தினந்தோறும் செய்து எப்படியாவது ஞானம் அடையவேண்டும் என்று ஒரு பள்ளி மாணவன் எப்படி வீட்டுப்பாடங்களை செய்வானோ அப்படி அவற்றை மனதில் சுமந்து செல்வேன். ஆனால் இந்த ஞான முகாமில்தான், அப்படி ஏதுமில்லாமல் இதுவரை இருந்த அனைத்து மனப் பயிற்சிகளையும், தியானப் பயிற்சிகளையும் இறக்கி வைத்து விட்டு எந்த வீட்டுப் பாடமும் இல்லாமல் அனைத்தையும் விட்டு விட்டு தெளிவாகவும் மனம் லேசாகவும், மகிழ்ச்சியாகவும் செல்கிறேன். இனி இந்தத் தெளிவு ஒன்றே போதும் என்று தோன்றுகிறது" என்று கூறினார்.

மேலும் இந்த மூன்று நாட்களும் ஐயாவின் வகுப்பு இல்லாத நேரங்களிலும் இரவு நேரங்களிலும் அன்பர்கள் அனைவரும் ஒருவருக்கு ஒருவர் அவரவர்களது அனுபவங்களையும் ஐயாவின் ஞானத்தெளிவை புரிந்துகொண்ட விதத்தையும் பகிர்ந்து கொண்டனர். இது அனைவருக்கும் பயனுள்ளதாகவும் உள்ளார்ந்த தேடுதலைக் கொண்ட உண்மை நண்பர்களின் உறவு கிடைப்பதற்கான வாய்ப்பாகவும் அமைந்தது.

இவற்றையெல்லாம் பார்க்கும் போது, ஐயாவின் நூல்களை படிப்பதோடு மட்டும் அல்லாது, ஐயாவின் சிறப்புரை கூட்டங்களிலும் ஞான முகாம்களிலும் கலந்து கொள்வது மிகவும் அவசியம் என்று தெரிகிறது. இவ்வாறு கலந்துகொள்வதன் மூலம் அவரவர்களின் தனிப்பட்ட ஐயங்களைப் போக்கி ஞானத்தெளிவு பெறுவதும், தெளிவில் உறுதி பெறுவதும் திண்ணம் என்பது தெரிகிறது.

தெளிவு பெற்றவர்கள் அனைவரும் அவரவர்களுக்கு அவர்களே ஒளியாகிறார்கள்.

இந்த தெளிவுக்குப் பிறகே நமது வாழ்வு முழுமையான வாழ்வாக மலர்கிறது. இதை விட மேலான ஒன்றை நாம் எவருக்கும் கொடுத்துவிட முடியாது.

எனவே தொண்டில் சிறந்த தொண்டு இந்த உண்மையை உரைப்பதே....

பகவத் ஐயா சென்னையில் இருக்கும் ஒவ்வொரு வாரங்களிலும் அவரது சிறப்புரைக் கூட்டங்களையும் ஞான முகாம்களையும் ஏற்பாடு செய்து அனைவருக்கும் இந்த ஞானத்தைக் கொண்டு சேர்க்கும் சிறந்த பணியை செய்து வரும் நமது ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்திற்கும் அதற்கு உறுதுணையாய் இருக்கும் அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் தலை வணங்கி நமது உளமார்ந்த நன்றியைத் தெரிவிப்பதோடு நாமும் தொண்டாற்றுவோமாக.....

அன்புடன்,

K.S. ஜீவமணி,
ஆசிரியர்,
செல் : 97891-65555

## ?கேள்வி பதில்

கேள்வி : ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நூல்களில் "நம் மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் மாற்ற முயற்சி செய்யாமல் அப்படியே விட்டுவிட வேண்டும்" என்று கூறப்பட்டுள்ளது. நமது பகவத் பாதை மே 2014 இதழில் ஆசிரியர் பகுதியில் "மனதை பயன்படுத்தி தான் அனைவரும் வாழ்க்கை வாழ்ந்தாக வேண்டும், மனதை பயன்படுத்தாதவர்கள் உலகில் எவரும் இல்லை" எனக் குறிப்பிட்டிருந்தீர்கள். அப்படி அன்றாடம் பயன்படுத்தும் மனதை சீரமைக்க வேண்டாமா? ஒவ்வொரு செயலுக்கும் காரணம் எண்ணமே. மனதில் தோன்றும் எண்ணங்களையும் உணர்வுகளையும் அப்படியே விட்டு விட்டால் ஆபத்தான விளைவுகள் ஏற்பட்டு விடாதா? மனதைப் பயன்படுத்துவது என்றால் என்ன? அப்படியே விட்டு விடுதல் என்றால் என்ன? இரண்டிற்கும் முரண்பாடு இருப்பது போல் தோன்றுகிறது. விளக்கம் தேவை.

பதில் : நாம் அனைவரும் மனதின் உதவியால் தான் அனைத்து விஷயங்களையும் புரிந்து கொள்கிறோம். நாம் எதையும் நேரடியாக உணர்வது கிடையாது. ஒரு விஷயத்தை மனம் எப்படிப் புரிந்து கொள்கிறதோ அப்படிதான் நாம் புரிந்து கொள்கிறோம். மனதில் தோன்றும் நினைவுகளையும், எண்ணங்களையும் கொண்டு தான் அனைத்து செயல்களையும் செய்கிறோம். எனவே நமது செயலுக்கான மூல காரணம் நமது எண்ணங்களே. இதில் எவருக்கும் சந்தேகங்கள் கிடையாது. ஆனால் நமது அனைத்து எண்ணங்களும் செயலாக மலர்வது இல்லை என்பதையும் தெரிந்து கொள்ளவேண்டும். எந்த எண்ணத்திற்கு அல்லது எந்த உணர்வுக்கு நாம் முக்கியத்துவம் கொடுக்கின்றோமோ அதுவே செயலுக்கான வடிவம் எடுக்கின்றது. முக்கியத்துவம் கொடுக்காத பல எண்ணங்கள் தோன்றியது தெரியாமல் மறைந்து விடுகின்றது. முக்கியத்துவம் என்பது அந்த எண்ணம் அல்லது உணர்வின் மீது நாம் காட்டும் ஈடுபாட்டையே குறிக்கிறது. அதாவது நமக்கு பிடித்தமான எண்ணங்களும் உணர்வுகளும் நமக்கு தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்ற முயற்சியாகவும் இருக்கலாம் அல்லது நமக்கு பிடிக்காத நாம் விரும்பாத எண்ணங்களையும் உணர்வுகளையும் அப்புறப்படுத்தும் போராட்டமாகவும் இருக்கலாம். இவை இரண்டுமே அந்த உணர்வுகள் மற்றும் எண்ணங்களின் மீது காட்டும் ஈடுபாட்டையே குறிக்கிறது. இப்படி நாம் அவற்றின் மீது காட்டும் ஈடுபாடே நமது செயலுக்கு காரணமாகி விடுகிறது.

எவரெல்லாம் "இனி எனக்கு கோபமே வரக் கூடாது" என அடிக்கடி சங்கற்பம் எடுக்கிறார்களோ அவர்களுக்கு கோபம் ஒரு பிரச்சினையாகி அதனால் பாதிப்படைகிறார்கள். ஏனெனில் அவர்கள் கோப உணர்வை அப்புறப்படுத்த வேண்டும் என போராடி அதன் மீது ஈடுபாடு காட்டி விடுகிறார்கள்.

அதே போல் எவரெல்லாம் தனக்கு காம சிந்தனையே தோன்றக்கூடாது என அப்புறப்படுத்த நினைக்கிறார்களோ அவர்கள் அதிக நேரம் காம சிந்தனையிலேயே சிக்கிக் கொள்கிறார்கள். அவர்கள் அப்புறப்படுத்த வேண்டும் என அதன்மீது காட்டும் ஈடுபாடே அந்த உணர்வையும் சிந்தனையையும் தூண்டி உறுப்திபடுத்துகிறது.

உண்மையில் நமது மனதிற்கு "இந்த இந்த" எண்ணங்கள் தான் தோன்ற வேண்டும், "இந்த இந்த" எண்ணங்கள் தோன்ற கூடாது என்ற எந்த கட்டுப்பாடும் கிடையாது. நம்மால் கட்டுப்படுத்தவும் முடியாது. நமக்கு பிடித்தது பிடிக்காதது என்ற எந்த பாகுபாடும் மனதில் கிடையாது. அது தானியங்கியாக செயல்படக் கூடியது.

எனவே மனதைச் சீரமைக்க நாம் எடுக்கும் முயற்சியானது கண்ணாடி முன் நின்றுக்கொண்டு அதில் பிரதிபலிக்கும் நம் உருவத்தை அப்புறப்படுத்த முயற்சி செய்வதைப் போன்றதே. நமது முயற்சி ஒரு போதும் வெற்றி அடையாது. அந்த முயற்சியும் போராட்டமும் அர்த்தமற்றது என்பதைப் புரிந்து கொண்டால் போதும். கண்ணாடிக்கும் நமக்கும் சுதந்திரம் என்பது தானாக ஏற்பட்டுவிடும். கண்ணாடியை பார்த்து கலைந்திருக்கும் நம் தலைமுடியை சீரமைக்கலாம், ஆனால் கண்ணாடியில் தெரியும் நம் உருவத்திற்கு தலைமுடியை சீரமைக்க வேண்டிய அவசியம் நமக்கு எதுவும் இல்லை என்பதைப் புரிந்துகொண்டால் போதும்.

மனம் எல்லாவற்றையும் காட்டும். அதை சீரமைக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. மனம் நாம் விரும்புகின்ற உணர்வையும் எண்ணத்தையும் மட்டும்தான் காட்டவேண்டும் என்பது, கண்ணாடி நாம் விரும்புகின்ற காட்சியை மட்டும்தான் பிரதிபலிக்க வேண்டும் என கட்டளை இடுவதை போன்றதாகும்.

கண்ணாடி தன்முன் தோன்றும் அனைத்து காட்சிகளையும் பிரதிபலிக்கும். இந்தக் காட்சி பிடிக்கும் இந்தக் காட்சி பிடிக்காது என்ற எந்தப் பாகுபாடும் அதற்குக் கிடையாது. அதுபோல் தான் ஆரோக்கியமான மனமும். நாம் அதனை சீரமைக்க எடுக்கும் முயற்சியே மனதின் ஆரோக்கியத்தைக் கெடுத்து விடுகிறது.

எனவே அவற்றை சீரமைக்க வேண்டிய வேலை எதுவும் நமக்குக் கிடையாது என்பதைப் புரிந்து கொண்டு புற சூழ்நிலைகளை நிர்வாகம் செய்வதற்கு மட்டும் தேவைக்கேற்ப பயன்படுத்திக் கொண்டால் போதும்.

விடுதலை என்பது தாமாக ஏற்பட்டு விடும்.

K. S. ஜீவமணி,
சேலம்
செல் : 9789165555

# பாதையில் மலர்ந்த மலர்கள்

## புரிதலும் புரிந்து கொள்பவனும்

தேடல் உள்ள எல்லோருக்கும் ஐயா அவர்களின் செய்தி எளிதில் சென்று சேர்ந்திடும். அவரது "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" புத்தகத்தை முதலில் படித்த போதே ஒரு பரவசமும், ஏதோ ஒரு தீர்வை அடைந்து விட்டது போலும் உணர்ந்தேன்.

இருந்த போதிலும் எனது மன இயக்கத்தில் பெரிய மாற்றம் ஏற்படவில்லை.

அகத்தளவில் முயற்சி இன்றியும், புறத்தில் முயற்சியும் இருப்பதே தேவைப்படுகிறது என்ற கருத்து மட்டும் மிகவும் புதிதாய் இருந்தது.

இதற்கிடையில் நான் வேறொரு அமைப்பின் (மெய்யுணர்வு மையம் – திரு. சிவசாமி) ஏழு நாள் ஆன்மிக பயிற்சியில் கலந்து கொண்டேன். அந்த அனுபவம் என்னுடைய தன் முனைப்பை (Ego) மிகவும் வலிமை இழக்க செய்திருந்தது.

அந்த பயிற்சி வகுப்பிற்கு பிறகு ஒரு நாள் ஐயா அவர்களின் "நான் யார்?" புத்தகத்தை படிக்க நேர்ந்த போது உண்மையில் என் மனோ இயக்கத்தில் ஒரு பெரிய மாற்றத்தை அறிந்தேன்.

அப்போது ஜே. கிருஷ்ணமூர்த்தியின் "காண்பவனே காணப்படும் பொருள்" என்ற கூற்றும், நான் என்ற உணர்வு எவ்வாறு மனோ இயக்கத்தில் ஒரு முரண்பாட்டை தோற்றுவிக்கிறது போன்றவையும் விளங்கியது.

நான் அனுபவித்த இந்த அமைதியும் மனோ நிலையும் சில நாட்களில் காணாமல் போனது. அது ஏன் என்று எனக்கு புரியவில்லை.

அந்த சமயத்தில் தான், வலைதளத்தில் ஐயாவின் ஒரு பகவத் பாதை இதழில், புரிதல் ஏற்பட்ட பிறகு புரிந்து கொண்டவன் என்ற ஒரு நான் உருவாவதை பற்றிக் கூறி இருந்தார்.

அப்போது தான் புரிதல் ஏற்பட்டபோதும் அந்த நிலையிலேயே இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பும் இருப்பதை அறிய முடிந்தது.

இயல்பு நிலையே, அடைய வேண்டிய நிலை என்ற போது அந்த எதிர்பார்ப்பு அர்த்தமற்றது, அதுவும் கூட நம் இயல்பின் ஒரு பாகமே என்று புரிந்தது.

மனதளவில் "அடைவதற்கு ஒன்றுமில்லை"

''உணர்வுகளை மாற்ற அதிகாரமில்லை'', (தேவையும் இல்லை)

"உணர்வுகளை பயன்படுத்திக் கொள்ள அனுமதி உண்டு." போன்றவை புரிந்தன.

உணர்வுகளும், உணர்வுகளில் இருந்து கணந்தோறும் உருவாகின்ற நான் என்ற உணர்வும் பிரவாகமாய் ஓடி மறைவதைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

இந்தத் தெளிவோடும், புரிதலோடும் ஐயா அவர்களை நேரில் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது.

அப்பொழுது நான் அவரிடம் கேட்ட பல கேள்விகள் சமூகப் பிரச்சினைகளை பற்றியதாகவே இருந்தன.

அதற்கு ஐயா அவர்கள் சமுதாய பிரச்சினைகள் முழுவதுமாக தீர்க்கப்பட வாய்ப்பு குறைவு என்றும், அவை ஏற்படுவதும், தீர்வுகளும் முயற்சிகளும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கும் என்றும் கூறினார்.

அன்று நான் அவரிடம் கண்ட ஒரு பண்பு, அவரது செயல் மற்றும் பேச்சில் இருந்த நிதானம் என்னை வியக்க வைத்தது.

புறச் செயல்களில் இந்த நிதானம் எவ்வளவு அவசியம் என்பது எனக்குப் புரிந்தது.

**செ. கார்த்திக்**
திருக்கழுக்குன்றம், காஞ்சீபுரம்.
98947-96525



## "நிகழ்காலம்"

ஜென்கதை

ஆன்ம தேடல் கொண்ட இளைஞன் ஒருவன் எல்லாவிதமான ஆன்மிக பயிற்சி, முயற்சிகள் என அனைத்தையும் கடந்து இறுதியாக விடுதலைக்கான வழி நிகழ்காலத்தில் விழிப்புணர்வுடன் வாழ்வது ஒன்று தான் என்பதைப் புரிந்துகொண்டான். நிகழ்காலத்தில் வாழ்வதற்காக எத்தனையோ ஆன்மிக ஆஸ்ரமங்கள், குருமார்கள் என பலரையும் சந்தித்து வந்தான். அவனுக்கு நிறைவான பதில் எங்கும் கிடைக்கவில்லை. அதிகம் படித்திராத, எந்த ஆஸ்ரமும் இல்லாத, எந்த ஆன்மிக அலங்காரமும் இல்லாமல் எளிமையாக நிகழ்காலத்தில் ஞானியாக வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு பெரியவரை சந்தித்து தன்னுடைய நெடுநாள் கேள்விக்கு விடையை கேட்டான் இளைஞன். அவருடன் நடந்த உரையாடல்....

இளைஞன் : நான் நிகழ்காலத்தில் வாழ்வதற்கு என்ன செய்யவேண்டும்?

பெரியவர் : எதுவும் செய்யத் தேவையில்லை.

இளைஞன் : பிறகு எப்படி தான் நிகழ்காலத்தில் வாழ்வது?

பெரியவர் : நிகழ்காலம் என்று நீ எதை நினைத்துக்கொண்டு இருக்கிறாய்?

இளைஞன் : விழிப்புடன் வாழ்வதையே நிகழ்காலம் என்று நினைக்கிறேன்.

பெரியவர் : விழிப்புடன் இருப்பதும், நிகழ்காலத்தில் வாழ்வதும் ஒன்றுதானே?

இளைஞன் : ஆமாம். இரண்டும் ஒன்றுதான், அப்படி என்றால் நிகழ்காலத்தில் வாழ்வது எப்படி?

பெரியவர் : நிகழ்காலம் என்று நீ எதைச் சொல்கிறாய்?

ஜென் கதை - "நிகழ்காலம்"

இளைஞன் : இங்கே, இப்பொழுது, இந்த கணத்தில் வாழ்வதை தான் நிகழ்காலத்தில் வாழ்வதாக நினைக்கிறேன்.

பெரியவர் : உனது நடைமுறை வாழ்வு முழுவதும் நடந்து கொண்டு இருப்பது என்ன என்று கூறுவாய்?

இளைஞன் : நிகழ்காலம் என்று தான் கூறுவேன்

பெரியவர் : உனது வாழ்வு நிகழ்காலத்தில் தானே நடந்துகொண்டு இருக்கிறது, நீ கூறியபடி இங்கே, இப்பொழுது, இந்தக் கணம் என்பது இது தானே.

இளைஞன் : ஆமாம். ஆனால் அதை தான் என்னால் சரியாக புரிந்து கொள்ள முடியவில்லையே!

பெரியவர் : நீ எப்பொழுதெல்லாம் நிகழ்காலத்தில் வாழவேண்டும் என்று முயற்சி செய்கிறாயோ அப்போது எல்லாம் நீ நிகழ்காலத்தைத் தவறவிடுகிறாய். நிகழ்காலத்தில் வாழவேண்டும் என்பதும் ஒரு முயற்சி தானே. உனது இந்த தொடர் முயற்சியால் நிகழ்காலத்தையும் எதிர்காலத்திற்குக் கொண்டு சென்று விடுகிறாய்.

இளைஞன் : அப்படி என்றால் நான் என்ன தான் செய்வது?

பெரியவர் : நிகழ்காலத்தில் வாழ்வதற்கு நீ எதையாவது செய்ய வேண்டும் என்று நினைக்கிறாய்.

இளைஞன் : ஆமாம், அப்படி தான்.

பெரியவர் : நிகழ்காலத்தில் வாழ்வதற்கு எந்த முயற்சியும் தேவையில்லை. நிகழ்காலத்தில் வாழ்வதற்கு எந்த முயற்சியும் உதவாது. நீ எப்போதும் வாழ்வது நிகழ்காலத்தில் தான். மீன் கடலில் இருந்து கொண்டே கடலைத் தேடி அலைவதை போன்றதுதான் நீயும் நிகழ்காலத்தில் இருந்து கொண்டே நிகழ்காலத்தைத் தேடி அலைவதும்.

இளைஞன் : என்னுடைய முயற்சி தான் எனக்கு தடையாக இருக்கிறது என்று கூறுகிறீர்களா?

பெரியவர் : ஆமாம். நீ இப்போது எங்கே நின்று கொண்டிருக்கிறாய்? உன் அடிப்பாதத்தில் தானே?

இளைஞன் : ஆமாம்.

பெரியவர் : நீ எங்கே நின்றாலும் உன் அடிபாதத்தில்தான் நிற்கிறாய். அதைப் பார்க்க முயற்சி செய்யும் ஒவ்வொரு கணமும் அடிப்பாதத்தில் நிற்பதைத் தவற விட்டுவிடுவாய். முயற்சியற்ற நிலையில் ஒவ்வொரு கணமும் உன் அடிப்பாதத்தில்தான் நிற்கிறாய். அதுபோல் தான் நிகழ்காலமும். உன்னுடைய முயற்சியால் நிகழ்காலத்தைத் தவற விட்டுவிடுகிறாய். உன்னுடைய முயற்சியை விட்டுவிட்டால் நீ இருப்பதே நிகழ்காலத்தில் தான்.

இளைஞன் : அப்படி என்றால் நான் நிகழ்காலத்தில் இருப்பது எனக்கு ஏன் தெரியவில்லை?

பெரியவர் : "நீ" தெரிந்தால் நிகழ்காலம் தெரியாது, நிகழ்காலம் தெரிந்தால் "நீ" தெரியமாட்டாய். எப்போதும் ஏதாவது ஒன்றை மட்டும் தான் நம்மால் உணரமுடியும்.

இளைஞன் : "நான்" என்ற தன்மை மறையும்போது நான் இருப்பது நிகழ்காலத்தில். என்னுடைய முயற்சிகளை விட்ட நிலையில் நான் இருப்பது நிகழ்காலத்தில் அப்படிதானே?

பெரியவர் : ஆமாம். உன்னை மறந்தால் நீயே உலகம். உலகத்தை மறந்தால் நீ மட்டுமே...

இளைஞன் : நான் இருப்பது இங்கே, இப்பொழுது, இந்த கணம் என்ற நிகழ்காலத்தில் என்பதைப் புரிந்துகொண்டேன்.

"நிகழ்காலத்தில் வாழ முயற்சி தேவையில்லை;
நம் முயற்சி கைவிட்ட நிலையில் நாம் இருப்பதே
நிகழ்காலத்தில்."



**Book packet** containing printed books
**Periodical**

*If undelivered please return to:*



Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

## சத்சங்கம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷன் மையத்தில் ஒவ்வொரு வாரமும்ஞாயிற்றுக்கிழமை மாலை 5-30 மணி முதல் 7-00 மணிவரை ஐயாவின் கருத்துகளில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

இப்படிக்கு,

ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9381019479, 9444756744

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555